ஷயமாகையாலே மறுவலிடிலோவென்ன; அங்ஙன்மறுவலிடும்படியாயோ ஆழ்வார் ப்ரசாதமென்பக்க ளிருப்பதென்கிறார். "ஶுசீநாம் ஶ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே" ( శుచీనాం శ్రీమతాం గేహే యోగభ్రష్టోభిజాయతే ) என்றும், "ஸமாதிபங்கஸ்தஸ்யாபி" ( సమాధిభంగ స్తస్యాపి ) என்றும், ப்ரம்ஸம் ப்ரஸங்கிக்கும் பகவத்க்ருபையளவிலே நினைத்திருக்கலாமோ ஆழ்வார்க்ருபையை.

( இன்றுதொட்டும் ) விஷயீகரித்த இன்றுமுதலாக, பகவத்ஸமாஸ்ரயணம்போலே ஆஸ்ரயிப்பதொரு காலமும் பலிப்பதொருகாலமுமாயோ ஆழ்வாருடைய விஷயீகாரமிருப்பது; விஷயீகாரதிவசமேதொடங்கி அநுபவகாலமாயன்றோவிருப்பது. (எழுமையும்) எழுஜந்மமென்று பலகூஷணம் ; மேலுள்ளகாலமெல்லாமென்றபடி. ( எம்பிரான் ) "பிரான்பெருநிலங்கீண்டவன்" என்றுபகவத்விஷயத்திலாழ்வார்பேசும்படியை, உபகாரஸ்ம்ருதியாலே ஆழ்வார்விஷயத்திலே பேசுகிறார். ( எம்பிரான் ) என்ஸ்வாமி. ( நின்று ) ஒருபடிப்படநின்று. உபகாரஸ்ம்ருதியாலே பகவல்லாபத்தளவு மாழ்வாரையநுபவித்து, பின்பது கிட்டினவாறேயதிலேதோள் மாறும்படியன்றிக்கேயிருக்கை. ( தன்புகழேத்த ) ஆழ்வாருடைய அநுபவத்துக்குள்ளே பகவதநுபவமாம்படியாயன்றோ ஆழ்வாருடையபெருமையிருப்பது. ( அருளினன் ) நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணினன். "மயர்வறமதிநலமருளினன்" என்று ஆழ்வார்பகவத்விஷயத்திற் சொன்னவார்த்தையை, ஆழ்வார்திருவடிகளிலே சொல்லுகிறாரிறேயிவர். ( குன்றமாடத்திருக்குருகூர்நம்பி ) தம்மையுமேத்தி யின்னமொருவிஷயத்தையு மேத்தவேண்டும்படியோ ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. "குன்றம்போல் மணிமாடநீடுதிருக்குருகூர்" என்றுஆழ்வாருளிச்செய்யுமதிறே யிவர்நெஞ்சிலே வாஸிதமாயிருப்பது, அத்தைச்சொல்லுகிறார். ( என்றுமென்னையிகழ்விலன் ) என்றுமிகழ்விலன், என்னையிகழ்விலன் - யாவதாத்மபாவிபுறம்பேயொருவிஷயத்திலே

போகவிட்டுக்கொடார். என்தண்மைபாராதே விஷயீகரித்தவர், என்னைவிஷயாந்தரங்களிலே போகவொட்டுவரோ. தந்திருவடிகளொழியப்புறம்பு புகலற்றிருக்கிற என்னை, "புறம்பேபோக" என்றாலும்போகலாம்படி யென்கையிலே யென்னைக்காட்டித்தருவரோ. (காண்மினே) இதுப்ரத்யக்ஷிக்கலாவதொன்றாயிருக்க, ஆழ்வார்பெருமை நான் சொல்லிக்கேட்கைமிகையன்றோ......................(சூ)

அரும்பதம்.

' என்றுமென்னையிகழ்விலன்காண்மின் ' என்றதற்கைக்கடாத்து ஸ்வாநுபவகர்ப்ப பரோபதேசமாதல், பரோபதேசகர்ப்பஸ்வாநுபவமாதல் சொல்லக்கூடாமையாலே சங்காபரிஹாரமுகேன வருளிச்செய்கிறார் (ஆழ்வார்இத்யாதி) "சதிர்த்தேனின்றே" என்று நீர்சந்தோஷித்திருந்தீர், இதுநிலைநிற்கப்புகுகிறதோ விஷயாந்தரங்களை யநாதியாக வநுபவித்தவாசனையால் நீர்தானேதிரும்பினாலோவென்று சங்காஹ்ருதயம். பகவத்ப்ரஸாதம்போலே ஆழ்வார் ப்ரஸாதம் மத்யே நழுவினாலோவென்ன வருளிச்செய்கிறார் "ஶாஶ்வதீ ந:" (சுலோ.) இத்யாதி இவ்வர்த்தத்துக்கு பூர்வார்த்தத்திலே நோக்காய் பகவத்விஷயத்திலும் நான்போகாதே யாவதாத்மபாவிதம்மையேத்தும்படி நிர்ஹேதுகமாகவருளின ஆழ்வாருடைய க்ருபையை பக்திநிஷ்டரை யோகபங்காதிகளையிட்டுக்கைவிடுமவன் க்ருபையோடு ஸமமென்னலாமோவென்றுகருத்து பகவத்ப்ரசாதத்திலு மதிசயிதமான ஆழ்வாருடைய ப்ரசாதத்துக்கு ஏழுஜந்மம் தன்புகழேத்தப்பண்ணினால் என்னால் ஏத்தவராகாமையாலே அநந்தகாலத்துக்கு முபலக்ஷணமாக்குகிறார் (ஏழுஜந்மமித்யாதி) அருளினபின்பன்றோ 'எம்பிரான்' என்று உபகாராநுஸந்தாநம்பண்ணப்ராப்தம், முன்னேதானே 'எம்பிரான்' என்பானேனென்கிறசங்கையை உபகாரஸ்ம்ருத்யதிசயத்தாலே சொன்னானொன்று ஸத்ருஷ்டாந்தமாக பரிஹரிக்கிறார் (பிரான் இத்யாதி) கீழ்வாக்யவிவரணம் (உபகாரஸ்ம்ருதியாலே இத்யாதி) 'தன்புகழ்' என்பானேன்; அவன்புகழ்; என்னவேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வாருடையஇத்யாதி) அநவரதபகவதநுபவபரரான ஆழ்வாரைத்தாமநுபவிக்கும்போது அந்த பகவதநுபவமிதிலே லபிக்குமென்று இவ்வாக்யத்துக்குதாத்பர்யம். ஹேதுவைச்சொல்லாமையாலேபலிதம் (நிர்ஹேதுகேத்யாதி) 'என்னையருளினன்' என்றுதேகேவலம் 'அருளினான்' என்கையாலே ஆழ்வார் 'எனக்க

ருளினன்' என்றுதவோபாதியருளிச்செய்தாரென்கிறார் (மயர்வற இத்யாதி) அருளுக்குமுன்பு தம்மையுளராகநினைத்திராரென்றகருத்து. நின்றுதன்புகழேத்துகைக்கு ஹேதுவாக (நம்பி) பததாத்பர்யம் (தம்மையும்இத்யாதி) ப்ரகாராந்தரேண வர்ணியாதே இப்படி வர்ணிப்பானேனென்ன அதுக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் (குன்றம்போல் இத்யாதி) 'என்றும்' என்றத்தையும் 'என்னை' என்றத்தையும் ஸமமாகக்ரியையிலே யர்வயங்காட்டிக்ரமேண விவரிக்கிறார் (என்றும் இத்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே 'என்னை' என்றதற்கர்த்தாந்தரம் (தன்திருவடிகள்இத்யாதி) 'குன்றமாடத்திருக்குருகூர்நம்பியானவெம்பிரான் இன்றுதொட்டு எழுமையும்நின்று தன்புகழேத்தவருளினானாகையாலே யென்றுமென்னையிகழ்விலன்காண்மின்' என்றந்வயம்.........................................(சு)

## ஏழாம்பாட்டு.

கண்டுகொண்டென்னைக்காரிமாறப்பிரான்
பண்டைவல்வினைபாற்றியருளினா
னெண்டிசையுமறியவியம்புகே
னொண்டமிழ்ச்சடகோபனருளையே.

### ப்ரதிபதம்.

என்னை-ஸத்துக்களாலே அநபேக்ஷயனான வென்னை. கண்டுகொண்டு - என்தோஷத்தைப்பாராதே ப்ரதமகடாக்ஷத்தைப்பண்ணிக்கொண்டு, காரிமாறப்பிரான்-அக்குடியிலேபிறந்து என்னுடையபிறவியெடுத்தற்குபகாரகர்; [காரிஎன்று அப்பேருடையபிதாவைச்சொல்லுகிறது] பண்டைவல்வினை-அநாதிஸித்தமாய் ப்ரபலமான பாபத்தை, பாற்றி-புகட்டு, அருளினான்-அருளினான், ஒண்டமிழ்ச்சடகோபனருளையே-ப்ஸாக்யத்தையுடைய தமிழ்ப்ரபந்தத்தையருளிச்செய்து சம்ஸாரிகளுடைய சாட்யத்தைப்போக்கின ஆழ்வாருடையக்ருபையையே, எண்டிசையும்- எட்டுத்திக்கிலுமிருக்கிறவர்கள், அறிய-அறியும்படி, இயம்புகேன்-சொல்லுகிறேன்.........*

### வ்யாக்யாநம்.

ஏழாம்பாட்டில், ஆழ்வார்தம்பக்கல்பண்ணின நிர்ஹேதுகவிஷயீகாரத்தைக்கண்டு, "இவ்விஷயீகாரத்துக்கு யோக்யதையுண்டாயிருக்க, நாட்டாரிழக்கைக்கடியென்" என்றநுஸந்தித்து, இவருடையபெருமையை யறியா

மையாலே யிருக்கிறார்கள்" என்றெலலாரு மறியும்படி சொல்லக்கடவேனென்கிறார்.

(கண்டுகொண்டு) நான்கிட்டினவளவி லாழ்வார்க் குண்டான திருவுள்ளம் நிதியெடுத்தாற்போலே யிருந்த தென்கிறார். "தம்மைப்பெறுகைக்கெதிர்சூழல்புக்குத்திரி ந்தாரிவா" என்றுதோற்றும்படி யிருந்ததென்கிறார். அவருடையக்ருபைகரு அநுத்தமமானபாத்ரமிறேநான். (என்னை) நாட்டாரிற்காட்டி லாழ்வாரக்குண்டான வாசியறியாதவென்னை. தம்முடைய நிர்ஹேதுகவிஷயீகாரத்தைப் ரதிபத்திபண்ணவுங் கூடமாட்டாதவென்னை யென்றுமாம். (காரிமாறப்பிரான்) ஆழ்வாரதம்பக்கலில் பண்ணின வுபகாரத்தை நினைத்துப்பிரானென்கிறார். காரிமாறப்பிரான் என்கிறவிசேஷணத்தாலே - ஆழ்வார்க்குபகாரகனான ஈஶ்வரன்பக்கல் போகாமைக்காக விசேஷிக்கிறார். 'ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" (ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்) என்கிறபடியே அவனுடையவுபகாரகத்வம் ஸர்வஸாதாரணமாயாயிற்றிருப்பது; அந்தஸாமாந்யத்திற்புகாமைக்காகத் தம்முடைய சுக்ருதத்தை விசேஷிக்கிறார். (பண்டைவல்வினை) அநாதிகாலம் ஸஞ்சிதமாய் விஷயாந்தரப்ராவண்ய ஹேதுவானபாபம்; சூர்ப்பநகியைப்போலே, வகுத்தவிஷயத்தைப் பற்றுகைக்கு வழியல்லாவழியே யிழிகைக்கீடானபாபம்; "ப்ரதமாவதியான பகவத்விஷயமே புருஷார்த்தம்" என்கிறபுத்திக்கடியானபாபம்; இவையாயிற்று - பண்டைவல்வினையாவது. வல்வினை - ப்ராயஶ்சித்தஸாத்யமுமன்றிக்கே, அநுபவவிநாஶ்யமு மன்றிக்கே யிருக்கை. (பாற்றியருளினன்) "த்விஷந்த: பாபக்ருத்யாம்" (த்விஷந்த: பாபக்ருத்யாம்) என்றும், "சும்மெனாதேகைவிட்டோடித்தூறுகள்சாய்ந்தனவே" என்றும்சொல்லுகிற ப்ரகாரங்களன்றிக்கே, உருமாய்ந்து போம்படிபண்ணினன். "தன் புகழேத்தவருளினன்" என்கிறபடியே - தம்மையேவாய்ப்புலத்தும்படி பண்ணினார்.

(எண்டிசையுமறியவியம்புகேன்) விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியறருசியுடையாரெல்லாருமறியும்படிசொல்லுகிறேன். "தொண்டரெல்லீரும்வாரீர்" என்னும் ஆழ்வாரோட்டைவாசனையாலேசொல்லுகிறார். அவர், "பகவத்விஷயத்தில் ருசியுடையாரெல்லாரும் வாருங்கோள்" என்கிறார்; இவரும் "ஆழ்வார்பக்கல ருசியுடையாரெல்லாரும் வாருங்கோள்" என்கிறார் ஆழ்வார்பக்கல் பாவபந்தத்தாலே. (ஒண்டமிழ்ச்சடகோபனருளையே) *மயர்வறமதிநல மருளினவனுடைய அருள்போலல்ல, ஆழ்வாருடையஅருள்; அவ்வருளுக்கு மயலானவளவிலேபண்ணியருளினஅருளிறே. ஒண்டமிழ் - ஒள்ளியதமிழ். அழகியதமிழென்றபடி. *பாலேய்தமிழரிசைகாரர்பத்தர் பரவும்படி திருவாய்மொழிபாடின அருளுக்குமேலேயிறேயென்னை விஷயீகரித்தஅருள்.....................(எ)

## அரும்பதம்.

ஏழ்ப்பாட்டில் "நின்றுதன்புகழேத்தவருளினன்" என்று ஆழ்வாருடைய நிர்ஹேதுககடாக்ஷத்தை அநுசந்தித்தவரெல்லார்க்கு முண்டாகவேண்டுமென்று 'எண்டிசையுமறியவியம்புகேன்' என்கையாலே ததநுகுணமாக சங்கதியருளிச்செய்கிறார் (ஆழ்வார்தம்முடைய இத்யாதி)

'கண்டுகொண்டு' என்றதுக்கு காணாதத்தைக்கண்டென்றும் தேடினதைக்கண்டென்றும்இரண்டுதாத்பர்யம். இவ்விரண்டையுமடைவே யருளிச்செய்கிறார் (நான்கிட்டின இத்யாதிவாக்யத்வயத்தாலே) இப்படி தம்மிடத்திலிருக்கைக்கடியென்னென்னவருளிச்செய்கிறார்(அவருடையஇத்யாதி) (அநுத்தமம்)யஸ்மாதுத்தமந்நாஸ்தி ததநுத்தமமென்று பஹுவ்ரீஹி. தோஷபூயிஷ்டட்டதையாலே தாமேக்ருபைக்குத்தமமான பாத்ரமென்றபடி. 'அறியவியம்புகேன்' என்ற உத்தமனாலே 'என்னை' என்றதுசித்தமன்றோ 'என்னை' என்றசொல்லவேண்டுமோவென்ன இதுக்கு இரண்டுதாத்பர்யமருளிச்செய்கிறார் (நாட்டார்இத்யாதிவாக்யத்வயத்தாலே) 'காரிமாறன்' என்றுற்போராதோ 'பிரான்' என்னவேண்டுமோவென்ன (ஆழ்வார்இத்யாதி) 'பிரான்' என்றுற்றுன்போராதோ காரிமாறப்பதந்தானேனென்ன (காரிஇத்யாதி) 'காரி' என்றுஆழ்வார் திருத்தகப்பனார்; 'மாறன்' என்று ஆழ்வார் திருநாமம். ஸ்ரீம

நாகவிகள் நிஷ்ட்டாநுகுணமாக ப்ரசித்தபாதகமாத்ரமாகச்சொல்லாதே பின்னேயுமுள்ளவற்றையெல்லாங்கூட்டி யருளிச்செய்கிறார். (அநாதித்யாதிவாக்யசதுஷ்டயத்தாலே) 'பாற்றி' என்றது நசிப்பித்து என்றர்த்தமாய் அத்தை வ்யாவர்த்யபூர்வகமாக வருளிச்செய்கிறார் "த்விஷஞ்ஞ:" (த்விஷந்த:) இத்யாதி. (பாபக்ருத்யாம்) பாபக்ரியையை; "க்ருத்யாக்ரியாதேவதயோ:" (க்ருத்யா க்ரியாதேவதயோ:) என்றிறேநிகண்டு. 'அருளினான்' என்றதுக்கு அர்த்தம் (தன்புகழஇத்யாதி) (எண்டிசைஎன்றது) எட்டுத்திக்குகளென்றாய் அதமஞ்சாக்ரோசந்திபோலே தத்ரதத்யரைச்சொல்லுகிறதென்கிறார் (விசேஷேத்யாதி) ஆழ்வாரை யநுபவிக்கிறவிவர் பரோபதேச ப்ரவ்ருத்தராய் எல்லாரையுமழைக்கிறதேனென்னவருளிச்செய்கிறார் (தொண்டர் இத்யாதிவாக்யத்ரயத்தாலே) 'சடகோபனருள்' என்றதுக்குவ்யாவர்த்ய பூர்வகமாக தாத்பர்யம் (மயர்வறஇத்யாதி) வ்யாவ்ருத்திதன்னேயுபபாதிக்கிறார். (அவ்வருள்இத்யாதி) அயலான-அசலான. 'ஒண்டமிழ்' என்றுவிசேஷிக்கையாலே திருவாய்மொழி யருளிச்செய்தவருள் தோன்றுகையாலும், 'சடகோபனருள்' என்கையாலும் பண்டைவல்வினைபாற்றியருளினவருளைச்சொல்லுகையாலும் இவ்விரண்டுக்கும் விசேஷணத்தை தர்சிப்பிக்கிறார். (பாலேய் இத்யாதி) 'காரிமாறப்பிரானென்னைக்கண்டுகொண்டு பண்டைவல்வினை பாற்றியருளினான் (இந்த) ஒண்டமிழ்ச்சடகோபனருளை எண்டிசையுமறிய வியம்புகேன்' என்றந்வயம்........................................................(எ)

## எட்டாம்பாட்டு.

அருள்கொண்டாடுமடியவரின்புற
வருளினானவ்வருமறையின்பொரு
ளருள்கொண்டாயிரமின்றமிழ்பாடினா
னருள்கண்டீரிவ்வுலகினில்மிக்கதே.

### ப்ரதிபதம்.

அடியவர்-சேஷபூதர். இன்புற-ஆநந்தநிர்ப்பரராக. அருள்-க்ருபையை. கொண்டாடும்-கொண்டாடும்படி. அவ்வருமறையின் பொருள்-மறையினந்தவரும்பொருளை. அருளினான்-ப்ரசாதித்தருளினான். அருள்கொண்டு - ஈஸ்வரக்ருபையையவலம்பித்து. ஆயிரம்-ஆயிரம்பாட்டாய். இன் - ரஸ்யமான. தமிழ் - திருவாய்மொழி

யை. பாடினனருள்கண்டீர்-அருளிச்செய்த ஆழ்வாருடையவருள்கண்டீர். இவ்வுலகினில்-இந்தலோகத்திலே. மிக்கது - மிக்கிருக்கிறது..............*

வ்யாக்யாநம்.

எட்டாம்பாட்டில், " எண்டிசையுமறியவியம்புகேன் " என்கைக்கு ஹேதுவென்னென்னில் ; ஆழ்வாருடை அருள் சிதசித்தீஸ்வர தத்த்வத்ரயத்தையும் கபளிகரித்திருக்கையாலே யென்கிறார்.

( அருள்கொண்டாடுமடியவர் ) இவ்வாழ்வார் தம்மைப்போலே யிருக்குமவர்கள். "அதுவுமவனதின்னருள்" என்றும், "அருள்பெறுவாரடியார்தம்மடியன்" என்றுமிருக்குமிவர்தம்மைப்போலே, "ஆனைக்கன்றருளையீந்த" என்றும், "நின்னோடுமொக்கவழிபடவருளினாய்" என்றும், "அருள்புரிந்தசிந்தை" என்றும், " நின்னருளேபுரிந்திருந்தேன் " என்றும், " அருளாதொழியுமே " என்றும், ப்படிகளாலவ னருளைக்கொண்டாடு மடியவர். இப்படியே பகவத்ப்ரசாதத்தையே கொண்டாடிப்போருமவர்கள். பகவத்ப்ரசாதஹேதுவாக ஸ்வகதமான கர்மஜ்ஞாநபக்திகளை உபாயமாக ஆதரிக்குமவர்களன்றிக்கே, " கேவலபகவத்ப்ரசாதமே உஜ்ஜீவநஹேது " என்றிருக்குமவர்கள். தந்தாம்பக்கலுள்ள ஆநுகூல்யங்களை ப்ரசாதபலமாக நினைத்திருக்குமதொழிய, ப்ரசாதமாக நினைத்திராதவர்கள். இவரிப்படிநினைத்திருக்கிறது மற்றையாழ்வார்களையிறே, "ஆழியானருளே " என்றும், " நின்னருளேபுரிந்திருந்தேன்" என்றுமிறே அவர்கள் பாசுரங்கள். (இன்புற) ஆநந்தநிர்ப்பரராக. " எண்ணுதனகளெண்ணுநன்முனிவரின்பந்தலைச்சிறப்ப " என்கிறபடியே, - சாதநத்திலந்வயமின்றிக்கே பகவதநுபவமே யாத்ரையாயிருக்கும்படியாக. ( அருளினானவ்வருமறையின்பொருள் ) அவ்வருமறை - ப்ரசித்தமாய்ப் பெறுதற்கரிதா யிருக்கிறமறை. அதாகிறது- வேதரஹஸ்யமான உபநிஷத்திறே. அவ்வருமறையின் பொருளையருளினான்- நித்யசத்வஸ்த்தர்க்கல்லது தோன்றாத உப

நிஷ்கர்த்தத்தையு மருளிச்செய்தார். பரமசாத்விகர்க்கு நித்யமான ஐஸ்வர்யமும் - உபநிஷத்ரஹஸ்யமிறே ; "ஸாஹித்ரஸ்யதாஸதாம்" (సాహిత్రస్యతాసతాం) ■ ன்னக்கடவதிறே. அதாவது - "ஸர்வரஸ:" (సర్వరసః) என்றும், "ரஸோவைஸ:" (రసోవైసః) என்றுஞ்சொல்லுகிறவிஷயத்தை தத்ப்ரசாதத்தாலேலபிக்கை. "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ఏషహ్యేవానందయాతి) என்றும்; "த்ஸேதுஸ்வயஷேசாத்" (తస్తేతుస్వయశేసాద్) என்றுஞ்சொல்லக் கடவதிறே.

(அருள்கொண்டு) இவர்தாம் ஸ்வபுத்தியாலே ■ ருளிச்செய்தாரன்று, "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே - ப்ரசாதலப்தஜ்ஞாநத்தை முதலாகக்கொண்டு,தத்ப்ரேரிதரரய்க் கொண்டாயிற் றருளிச்செய்தது. "என்னுகியேதப்புதலின்றித்தன்கவிதான்சொல்லி" என்கிறபடியே - பிறரோபாதி, கவிபாடுகிறதாமும் விஸ்மிதராம்படி. நிரவத்யமாகவிறே கவிபாடுவித்துக்கொண்டது, (ஆயிரமின்றமிழ்பாடினன்) "சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி:" (చతుర్వింశత్సహస్రాణిశ్లోకానాముక్తవాన్ఋషిః)என்றாற்போலே ஆயிரமாகவாயிற்றுப்பாடிற்று. ஓராத்மாவுக்கு ஹிதாம்சத்துக்கோரோ பாட்டேயமையும்படி யிறேயிருப்பது, (இன்றமிழ்பாடினன்) துரவகாஹமானவர்த்தத்தை "வாக்யேநமதுரேணம்" వాక్యేన మధురేణం) என்கிறபடியே ரஸகமாகவும் சர்வாதிகாரமாம்படியாகவும்பாடினர். (பாடினனருள்கண்டீர்) "மயர்வறமதிநலமருளினன்"என்னும்படியான அருளல்ல, அதுதன்னையும் விளாக்குலைகொண்டிருக்குமருளிறேஆழ்வாரருள். ஈஸ்வரன் கைவிட்டஆத்மாக்களிலும், அவர்களுடையதுர்க்கதியைக்கண்டு திருத்த வொருப்பட்டபடியாலே இவரருள் ப்ரத்யக்ஷமன்றோவென்கை. (இவ்வுலகினில்மிக்கதே) சிதசிதீஸ்வரதத்வத்ரயத்தையும் கபளீகரித்திருக்கை, "அதனில்பெரியவென்னவா" என்று பகவத்

விஷயத்தில் தமக்குண்டான அபிநிவேசத்தளவும் போரு மாயிற்றென்னளவிலேக்ருபையும். ...... ................(அ)

## அரும்பதம்.

'ஹேதுவென்னென்னில்' என்றது- எல்லாருமதிசயிக்கும்படி சொல்லுகைக்குஹேதுவானவருடைய வதிசயமெனனெனனிலென்றபடி. கபளீகரித்திருக்கையாலே என்றவநந்தரம் 'இயம்புகேன்' என்றுசேஷம். அருள் கபளீகரித்திருக்கையாவது - தனனதிசயத்தாலே தத்வத்ரயத்தையும் விஞ்சியிருக்கை. இவ்வாழ்வாரும் மற்றவர்களு மருளைக்கொண்டாடினரோவென்ன வருளிச்செய்கிறார் ( அதுவுமவனதித்யாதி ) அருளைக்கொண்டாடுகைக்கு ஹேதுவேதென்ன (இப்படி இத்யாதி) இவர்கள்பக்கலானுகூல்யாதிகளிருக்க பகவத்ப்ரஸாதமே யுஜ்ஜீவநகரமாகக் கூடுமோவெனன (தந்தாமித்யாதி) 'அருள்கொண்டாடுமடியவர்' ஆழ்வார்களேயாகவேணுமோவென்ன (இவரித்யாதி) இதுக்குநியாமகமேதென்ன (ஆழியான் இத்யாதி) பதார்த்தமருளிச்செய்து தாத்பர்யார்த்தமருளிச்செய்கிறார் (எண்ணுதனகள் இத்யாதி) எண்ணுதாகள்-அஸங்கயேயகல்யாணகுணங்கள், சாதநாந்தரநிஷேதம்பண்ணுகிறவிப்ரபந்தத்தை யநுஸந்திக்கவே யவர்களுக்குண்டான வத்யவசாயம் ஸ்த்திரமாமென்று இவ்வாக்யத்துக்கு தாத்பர்யம். 'மறையின் பொருள்' என்றதுக்கு தாத்பர்யார்த்தம் (நித்யேத்யாதி) 'அருளினன்' என்கைக்கு அதனுடைய சீர்மையேதென்ன வருளிச்செய்கிறார் (பரமேத்யாதி) உபநிஷத்ரஹஸ்யம் சீரியதென்னுமதுக்கு ப்ரமாணம் (ஸாஹீத்யாதி) 'ஸா' என்றுத்ரயைச்சொன்னாலும் அதுக்கு ததர்த்தத்வாராவென்று கருத்து. ஸத்த்வநிஷ்டர்க்குத்தோற்றுகிற அர்த்தமேதென்ன (அதாவது இத்யாதி) உக்தார்த்தேப்ரமாணம் (ஏஷஇத்யாதி) பகவதஆநந்தஹேதுத்வே நாநந்தயதிதிவ்யபதேஸாச்சேதி சூத்ரார்த்தஃ. அருமறையின்பொருளையருளினப்ரகாரமேதென்னு மாகாங்க்ஷயிலே 'அருள்கொண்டு' என்றருளிச்செய்தாரென்று திருவுள்ளம்பற்றி வ்யாவர்த்யபூர்வகமாக பகவத்க்ருபை மூலமென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவர்தாம் இத்யாதி) அவனேப்ரேரித்தானென்ன ( என்னுகியேஇத்யாதி ) அநந்தமானவேதார்த்தத்தை சங்க்ரஹித்து ஸஹஸ்ரசங்க்யையாக ப்ரபந்தீகரித்தாருண்டோவென்ன (சதுர்விம்ஸதிஇத்யாதி) ஸ்ரீராமாயணத்தோடு ஸமமாக இருபத்துநாலாயிரமாகப்பாடாதே ஆயிரமாகப்பாடுவானென்னென்ன (ஓராத்மாவுக்குஇத்யாதி) "சடகோபனருள்" என்றாற்போலே 'பாடினனருள்' என்றதுக்கு ஹார்த்

தாத்பர்யம் (மயர்வறஇத்யாதி) 'கண்டீர்' என்றதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார். (ஈஸ்வரன் இத்யாதி) "[illegible] [illegible]" ( [illegible] ) என்கிறவ்யுத்பத்தியை யுட்கொண்டு அருளிச்செய்கிறார் ( சிதசித்தீஸ்வரோத்யாதி ) தம்முடையபக்கல்பண்ணின க்ருபையை த்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறார். (அதனில்இத்யாதி) 'அருள்கொண்டாடுமடியவரின்புற வவ்வருமறையினுடைய பொருளையருளினான்; அருள்கொண்டாயிர மின்றமிழ்பாடினானுடையவருளிவ்வுலகினில்மிக்கதேகண்டீர்' என்றந்வயம்.........(அ)

## ஒன்பதாம்பாட்டு.

மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள்
நிற்கப்பாடியென்னெஞ்சுணிறுத்தினான்
தக்கசீர்ச்சடகோபனென்னம்பிக்காட்
புக்ககாதலடிமைப்பயனன்றே.

### ப்ரதிபதம்.

மிக்கவேதியர்-அதிசயித்தமுமுக்ஷுக்களுடைய. வேதத்தின்-வேதத்தினுடைய. உட்பொருள்-குஹ்யமான அர்த்தத்தை. நிற்க-நிற்க. பாடி-ப்ரபத்திவிஷயமாகப்பாடி. என்னெஞ்சுள்-என்மநஸ்ஸிலே. நிறுத்தினான்-சுப்ரதிஷ்டிதமாம்படி பண்ணினார். தக்க-தகுதியான. சீர்-ஜ்ஞாநாதிபூர்த்தியையுடைய. சடகோபனென்னம்பிக்கு-என்னுடையபூர்ணரான ஆழ்வார்க்கு. ஆட்புக்ககாதல்-தாஸ்யத்திலே ப்ரவேசத்தாலுண்டானகாதல். அடிமை-தாஸ்யதைக்கு. பயனன்றே-ப்ரயோஜநமதுவே.................................*

### வ்யாக்யாநம்.

ஒன்பதாம்பாட்டில், "ஆழ்வாருடைய அருளுலகினில்மிக்கது" என்கைக்கடியென்னென்னில்; என்னுடைடையதன்மைபாராதே சகலவேதங்களினுடைய ரஹஸ்யார்த்தத்தைப்பாடி, அத்தையெனக் குபகரித்தாரென்கிறார். "நீசனேன் நிறையொன்று மிலேனென்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதி" என்றவ்விஷயத்தில் ஆழ்வாரருளிச்செய்தத்தை, ஆழ்வார்திருவடிகளிலே யிவரருளிச்செய்கிறார்.

( மிக்கவேதியர் ) ப்ரமாணஶ்ரேஷ்டமானவேதத்தையே நிரூபகமாகவுடையவர்கள். " உளன்சுடர்மிகுசு

ருதியுள்" என்றாழ்வாரருளிச்செய்யக் கேட்டிருக்கையா லே, "ப்ராமணஶ்ரேஷ்ட" (ப்ராமணஶ்ரேஷ்ட) என்கிறார். அநேகசாகாத்யயநம் பண்ணினவர்களென்றுமாம். (வே தத்தினுட்பொருள்) சகலவேதங்களினுடைய ரஹஸ்யார் த்தத்தை. வேதாந்தரஹஸ்யம் -ததீயசேஷத்வ பர்யந்தமா ன பகவச்சேஷத்வ மென்றிறே வைதிகசாஸ்த்ரம் நிர்ணயி த்தது. (நிற்கப்பாடி) துர்க்ரஹமான இந்தரஹஸ்யார்த் தத்தைக் கேட்பார்க்கு ப்ரதிபத்திவிஷயமாம்படிபாடி. "ப ரமனைப்பயிலும் திருவுடையாரயவரேலும்" என்றும் "எ ம்மையாளும்பரமர்" என்றுமருளிச்செய்தாரிறே. (என் னெஞ்சுணிறுத்தினன்) பகவச்சேஷத்வத்துக்குங் கூட மேட்டுமடையான என்னெஞ்சிலே யிந்தைஸ்த்திரமாக்கி னூர். கல்லைத்தொளைத்து அதிலேநீரைநிறுத்துவாரைப்போ லே, நிர்விவரமான என்னெஞ்சுக்குமிதுவே விஷயமாம் படிபண்ணினூர். இதிறே - என்தன்மையைப்பாராதே யெ ன்றிறத்திற்பண்ணின வுபகாரம்.

(தக்கசீர்ச்சடகோபன்) இதுதொடங்கி உபகாரஸ் ம்ருதியாலே தமக்குப்பிறந்தஅபிநிவேசத்தைப்பேசுகிறார். (தககசீர்ச்சடகோபன்) "சர்வேஸ்வரன்கவிகள்" என் றால் தகுதியான கல்யாணகுணங்களையுடைய ஆழ்வார். "அயர்வறுமமரர்களதிபதி" என்றால்சர்வேஸ்வரத்வத்துக் குப்போரும்படி யிருக்குமாபோலே, "சர்வேஸ்வரன்கவி கள்" என்றால்போரும்படியாயிற்றாழ்வாரிருக்கும்படி; "ஏ ற்கும்பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்றனக் கேற்கும் பெரும்புகழ்வண்குருகூர்ச்சடகோபன்" என்றுதாமேயரு ளிச்செய்தாரிறே. (என்னம்பிக்கு) அதுக்குமேலேயொரு பௌஷ்கல்யமிறேயிது. என்னைவிஷயீகரிக்கைக்குத்தகுதி யான சீலாதிகுணபௌஷ்கல்யத்தை யுடையவரானவர்க் கு. (ஆட்புக்ககாதல்) அநந்யார்ஹ சேஷமாக்கினருசி. (அடி மைப்பயனன்றே) இந்தருசியன்றோ அப்போதேதாஸ்ய மான ப்ரயோஜநத்தோடே வ்யாப்தமாயிருப்பது. பகவத் விஷயத்தில் ருசியடியாகப்பிறந்ததாஸ்யம், சரீரவிஶ்லேஷ

ம்பிறந்தால் அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒருதேசவிசேஷத்
திலேசென்றால் பெறக்கடவதாயிறேயிருப்பது; அவ்வனன்
றிங்கே, ஆழ்வார்பக்கல் பிறந்தருசி, இச்சரீரத்தோடே யி
ங்கேயாழ்வார் திருவடிகளிலே யெல்லாவடிமையுஞ் செய்
யலாம்படி பண்ணும். "துயராறுசுடரடிதொழுதெழு" எ
ன்றுமுதலிலே அபிநிவேசித்த ஆழ்வார்க்கு * முனியேநா
ன்முகனுங் கவ்வருகேயிறே பேறாயிற்று; இவ்விஷயத்தி
ல் ருசிபிறந்தால் அத்தனைவிளம்பியாதென்கிறது. அன்
றேயென்றது - ஆமென்றுமாம்..............................(கூ)

## அரும்பதம்.

மிக்கதென்னைக்கு என்றது - மிக்கதென்றிகையென்றபடி.
ஸ்ரீமதுரகவிகள் அங்காதிரத்தினின்றும் ஆழ்வாருடைய திவ்யதேஜ
ஸ்ஸை ஸாக்ஷாத்கரித்துவந்த மஹாயோகிகளாகையாலே இவருக்
கொரு தண்மையுமுண்டோவென்ன வ்யாக்யாதாத்ருஷ்டாந்தமு
கேந நைச்யமென்றருளிச்செய்கிறார் (நீசனேன் இத்யாதி) 'மிக்க
என்றதுக்கு ப்ரேஷ்டத்தையும் பஹுத்வமும் என்றிரண்டர்த்தம்'
முந்தினதையருளிச்செய்கிறார் (ப்ரமாணேத்யாதி) ப்ரமாணப்ரா
ஷ்ட்யமபௌருஷேயத்வாதிகளாலே. இப்படி விசேஷணமிட்டுச்
சொல்ல வேண்டுமோவென்ன; ஆழ்வார்விசேஷணமிட்டாற்போ
லே யருளிச்செய்தாரென்கிறார் (உளன் இத்யாதி) இரண்டாமர்த்
தம் (அநேகேத்யாதி) வேதார்த்தம் பகவச்சேஷத்வமன்றோ, உள்
பொருளை தன்னெஞ்சில் நிறுத்துகையாவதென்னென்ன, அருளிச்
செய்கிறார் ('வேதாந்தரஹஸ்யம்' என்றுதொடங்கி 'ஸ்த்திரமாக்
கினார்' என்னுமளவும்) ஆழ்வாரேவிக்கொள்ளத்தாமிங்கே யடிமை
செய்கையாலே நமக்கிங்கே சித்தித்தவடிமை ஆழ்வாருக்கர்ச்சாவ
தாரமேவிக்கொள்ளமாட்டாமையாலே பரமபதத்திலே சித்தித்த
தென்றபடி. வேதாந்தரஹஸ்யம்ப்ரணவத்தில் சதுர்த்த்யர்த்தம். உ
க்தார்த்தத்துக்குத்ருஷ்டாந்தமுகேந விவரிக்கிறார் (கல்லைத்தொளை
த்தித்யாதி) நிர்விவரமான பகவச்சேஷத்வம்கூடப் புகுராதபடி
கிழாடே யிவ்வர்த்தத்துக்குச் சேர்த்தியாகையாலே ப்ரக்ருதார்
த்தோப ஸம்ஹாரம்பண்ணுகிறார். (இதிறே இத்யாதி)

'இது தொடங்கி என்றது' இந்த அர்த்தமும் மேற்பாட்டும்.
தக்கவென்றதுக்கொண்டு சொல்லவேண்டுகையாலே சர்வேஶ்வ
ரன் கவி என்றுசொல்லுகைக்குத்தக்கவொன்றர்த்த மருளிச்செய்
கிறார் (சர்வேஶ்வரன் இத்யாதி) கண்ணன்தனக்குக்கவியென்றாலே

ற்கும் பெரும்புகழ் என்றுகருதி ப்ரமாணமருளிச்செய்கிறார். (ஏற்கும் இத்யாதி) 'தக்கசீர்' என்றபோதே கல்யாணகுணங்களைச்சொல்லியிருக்க 'நம்பி' என்பானென்னென்னில் அருளிச்செய்கிறார். (அதுக்குமேல் இத்யாதிவாக்யத்வயத்தாலே) 'ஆள்புக்ககாதல்' ஆள்புக்குப்பண்ணினகாதல். இத்தையருளிச்செய்கிறார். (அதுக்கே இத்யாதி) அடிமையை பயனாக-பலமாக. உடைத்தானதென்று அர்த்தமருளிச்செய்கிறார். (அப்போது இத்யாதி) வ்யாவர்த்யபூர்வகம் விவரணம்பண்ணுகிறார். (பகவதித்யாதி) இத்தை ஸூசிக்கிறார் (துயர் இத்யாதி) முந்தினவர்த்தத்தில் 'அன்றேயடிமைப்பயனை' என்றந்வயம். இரண்டாமர்த்தத்துக்கு யதாக்ரமமந்வயம்...........(௯)

## பத்தாம்பாட்டு.

பயனன்றாகிலும்பாங்கலராகிலும்
செயல்நன்றாகத்திருத்திப்பணிகொள்வான்
குயில்நின்றார்பொழில்சூழ்குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன்மொய்கழற்கன்பையே.

### ப்ரதிபதம்.

பயனன்றாகிலும்-ப்ரயோஜநமில்லாதேயாகிலும். பாங்கலராகிலும்-பாங்கலராகிலும். செயல்-வ்யாபாரத்தை. நன்றாக-அநுஷ்டாநபர்யந்தமாக. திருத்தி-சிக்ஷித்து. பணிகொள்வான்-பகவத்பாகவதகைங்கர்யத்தில் அந்வயிப்பிக்கிறார். குயில்-ஆழ்வார்பரிசரத்திலேயிருக்கிறகுயில்களுங்கூட. நின்று-நின்று. ஆர்-திருவாய்மொழியைப்பாடுகிற ஸம்ருத்தியையுடைய. பொழில்-பொழிலாலே. சூழ்-சூழப்பட்ட. குருகூர்-திருநகரிக்கு. நம்பி-நிர்வாஹகரானவரே. உன்றன்-தேவரீருடைய. மொய்-ச்லாக்யமான. கழற்கு-திருவடிகளுக்கு. அன்பையே-அன்பையே. முயல்கின்றேன்-அர்த்தியாநின்றேன்......................................................

### வ்யாக்யாநம்.

பத்தாம்பாட்டில், ஆழ்வார்தமக் குபகரித்தவுபகாரத்தை யநுசந்தித்தவாறே, தாமிதுக்குமுன்பு ஆழ்வார்விஷயத்தில் நின்றநிலையடங்க முதலடியிட்டிலராகித்தோற்றுகையாலே, அவர்பண்ணின வுபகாரத்தைப்பேசுகிறார். ஆசார்யன்பண்ணின உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லையோவென்னில்; "[illegible]

௩ய௯௫-௩" ( [illegible] ) என்று- பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமியும் ஸத்ருசமல்லவென்றிறே சாஸ்த்ரம். அவனிவனுக் குபகரித்தது சர்வாதிகமா யிருப்பதொரு மிதுநத்தையானால், அப்படியே யிருப்பதொரு மிதுநத்தையுபகரித்தாலிறே இவன் ப்ரத்யுபகாரம்பண்ணினானவது; ஆகையாலே ஆசார்யவிஷயத்திலெல்லாம் செய்தாலும், அவன்பண்ணினவுபகாரத்தைப்பார்த்தால் "ஒன்றும்செய்திலன்நான்" என்று முகக்குறைவாளனாய்ப் போருமித்தனை.

( பயனன்றாகிலும் ) நாட்டிலேயொருவனுக் குபகரிப்பது ஒருப்ரயோஜநத்தைப்பற்றியிறே, அங்ஙனன்றிக்கே ஒரு ப்ரயோஜநமில்லாதிருக்கச்செய்தேயும். ( பாங்கலராகிலும் ) ப்ரயோஜநமில்லாவிட்டால், சொல்லுகிறபோது ஹிதங்கேட்கைக்குப் பாங்காயிருக்கலாமிறே; அங்ஙன்பாங்கின்றிக்கே யிருந்தார்களேயாகிலும். இப்படியிருக்குமவர்களுக்கு ஹிதஞ்சொல்லுகைக்கு ஹேதுவென்னென்னில்; இவர்களநர்த்தம்பொறுக்கமாட்டாமையிறே; இப்படியுபதேசிப்பாருண்டோவென்னில்; ராவணனுடைய துர்க்கதியைக் கண்டு "மித்ரமௌபயிகங்கர்த்தும்" ( [illegible] ) என்று அவனுக்கு ஹிதஞ்சொன்னாளிறேபிராட்டி ; ஒருவன், தலைக்கடையையும் புழைக்கடையையும் அடைத்துக்கொண்டகத்துக்குள்ளேகிடக்க, அகம்நெருப்புப்பட்டுவேகாநின்றால் கண்டுநின்றாரவிக்கும்போது, தங்களுக்கொரு ப்ரயோஜநத்தைப்பார்த்தல், உள்ளேகிடந்தவனபேக்ஷித்ததுக்காக வாதலன்றிறேயவிப்பது ; இப்படியாயிற்றாழ்வார்படியும். ( செயல்நன்றாக ) தனக்கொரு ப்ரயோஜநமில்லையேயாகிலும், எதிர்த்தலைபாங்கன்றியே யொழிந்தால் அவனுஜ்ஜீவிக்கும்படி யென்னென்னில்; தன்னுடையசெயலாலேயெல்லாம்நன்றாம்படிபண்ணி. இவன்செயல்தான் நன்றாம்படி யென்னவுமாம். (திருத்திப்பணிகொள்வான் ) "திருந்தவடியவர் தம்மைத்திருத்திப்பணிகொள்ளவல்ல" என்று- "ப்ராப்யமும் ப்ராபகமுந்தானே" என்றத்யவசி

த்திருக்குமவர்களுடைய விரோதியைப்போக்கி அடிமைகொள்ளுமவனென்றதிறே சர்வேஶ்வரனை; அங்ஙனன்றிக்கே, இவையொன்றுமின்றிக்கே யிருக்குமவர்களையும் திருத்திப்பணிகொள்ளுமவரிறே ஆழ்வார். பணிகொள்வான் - "குருகூர்நம்பி" என்றந்வயம்.

குயில்நின்றார் பொழில்சூழ் என்றவிடம் திருத்திப்பணிகொள்ளும்படிக்கு த்ருஷ்டாந்தம். இவரொருகாலத்திலே ஆற்றாமையாலே "காணவாராய்" என்றுகூப்பிடுவதுமொருபாசுரமுண்டு; "யாவர்நிகரகல்வானத்தே" என்றுகளித்துச்சொல்லுவதுமொருபாசுரமுண்டு; இவர் பாசுரத்தைக்கேட்ட குயில்களும் செவியொத்து அத்தாலே யிப்பாசுரத்தையேசொல்லும்; ஆக இரண்டுபாசுரத்துக்கும் குயில்களாயிற்றுப் பயிற்றுவன. (குருகூர்நம்பி) "ஊரும்நாடுமுலகமுந்தன்னைப்போல்" என்றுசேதநருடைய வளவன்றிக்கே, திர்யக்குகளளவு மேறும்படியாயிற்று ஆழ்வாருடைய பூர்த்தியிருப்பது. (முயல்கின்றேனுன்றன்மொய்கழற்கன்பையே) உன்னுடைய ஶ்லாக்யமானதிருவடிகளுக்கன்பையே முயல்கின்றேன் - அர்த்தியாநின்றேன். செய்கிறவடிமையால் பர்யாப்திபிறவாமையாலே, 'திருவடிகளிலே யெனக்கபிநிவேசம்வேணும்" என்றர்த்திக்கிறாரிறே. "என்னைத்தீமனங்கெடுத்தா யுனக்கென்செய்கேன்" என்றாழ்வார்தாம் அவ்விஷயத்திலே தடுமாறினாற்போலே, பண்ணினவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங்காணாமையாலே தடுமாறுகிறார்................................(௧௦)

அரும்பதம்.

"ஆட்புக்ககாதலடிமைப்பயனன்றே" என்று தாமநுகூலராய் கைங்கர்யங்களைப்பண்ணிக்கொண்டிருக்க, 'பயனன்றாகிலும் பாங்கலராகிலும்' என்றநுஸந்திக்கக்கூடுமோவென்கிற சங்கையிலே அதுதன்னெஞ்சிற்படாமையாலே யருளிச்செய்கிறாரென்று அவதாரிகை. (ஆழ்வார் இத்யாதி) தமக்கு - மதுரகவிகளுக்கு. உபகாரத்தை என்றது - 'என்னெஞ்சுள்நிறுத்தினான்' என்றத்தைக்கடாக்ஷித்து 'இதுக்குமுன்பு' என்றது - 'பயனன்றாகிலும்' இத்யாத்யநுஸந்தானத்துக்கு முன்பென்றபடி. 'அவன்பண்ணின உபகார

ம்' என்றது-தன்பக்கலொன்றுமின்றிக்கே யிருக்கப்பண்ணின உபகாரமென்றபடி முதலடியிட்டதாகத்தோற்றுமைக்கு ஹேது தாம் பண்ணின அநுகூலாசரணம் சத்ருஶமல்லாமையாலே யத்தைப்பண்ணக்கூடாதென்று கருத்து. ப்ரத்யுபகாரம் - ஸத்ருஶோபகாரம் ப்ரத்யுபகாரமில்லாமைக்கு சாஸ்த்ரங்காட்டினவநந்தரம் உபபத்தியுங்காட்டுகிறார் (அவனிவனுக்கித்யாதி) தார்க்கிகனுபதேசிக்கைக்குபபத்தியுங்காட்டுகிறார் (ஒருவன் இத்யாதி) அகம்-க்ருஹம். சங்காசமாதான பூர்வகமெடுத்த ப்ரதீகத்துக்கு தாத்பர்யம் (தனக்கு இத்யாதி) ஸ்வப்ரயோஜநமில்லாதேபோனாலும் அவன் ப்ரயோஜநமானாலும் ஸித்திக்கவேண்டாவோவென்று சங்கைக்கு கருத்து. 'செயல்நன்றாக' என்றது சாமாந்யமாகவிருக்கையாலே, ஆழ்வாருடையசெயலாலே என்று மேலருளிச்செய்து இவன்செயலை நன்றாகப்பண்ணியென்றர்த்தாந்தரம் (இவன்இத்யாதி) திருத்தியென்றதுக்குத் திருந்தாதவரையும் திருத்தியென்றாய் வ்யாவர்த்யபூர்வகமாக தாத்பர்யமருளிச்செய்கிறார் "தீர்க்த" இத்யாதிவாக்யத்வயத்தாலே (இவையொன்றுமின்றிக்கேயென்றது) ப்ராப்யமவனே என்றும் ப்ராபகமவனே என்றும் சொல்லுகிற அத்யவசாயங்களின்றிக்கே என்றபடி. 'கொள்வான்' என்றது கொள்ளுகைக்காகவென்று போராமைக்காக அந்வயங்காட்டுகிறார் (பணிகொள்வான் இத்யாதி) செவியொத்து அத்தாலே-செவியாலே. பயிற்றுகை - அப்யஸித்துச்சொல்லுகை. 'நம்பி' பததாத்பர்யம் (ஊரும்இத்யாதி) 'மொய்' ஶ்லாக்யதை. 'கழற்கு' என்றது சம்பந்தசாமாந்யஷஷ்டியாய் விஷய விஷயீபாவனையிட்டு தாத்பர்யம் (செய்கிறஇத்யாதி)முன்பே அபிநிவேசமுண்டாயிருந்தஇவர் புநஃ அத்தை ப்ரார்த்திப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (என்னையித்யாதி) (௧௦)

## பதினொன்றாம்பாட்டு.

அன்பன்றன்னையடைந்தவர்கட்கெலா
மன்பன்தென்குருகூர்நகர்நம்பிக்
கன்பனாய்மதுரகவிசொன்னசொல்
நம்புவார்பதிவைகுந்தங்காண்மினே.

### ப்ரதிபதம்.

அன்பன்-ஈஶ்வரன் வாத்ஸல்யத்தையே நிரூபகமாகவுடையவன். தன்னை-தம்மை. அடைந்தவர்கட்கெலாம்- ஆஶ்ரயித்தவெல்லார்பக்கலிலும். அன்பன்-வாத்ஸல்யத்தையுடையரான. தென்-ஸ்ப்ருஹணீயமான. குருகூர்நகர்-திருநகரிக்கு. நம்பிக்கு - நிர்வா

ஹ்ருதரான ஆழ்வாருக்கு. அன்பனாய் - தாசபூதராய். மதுரகவி-ஸ்ரீமதுரகவிகள். சொன்ன-அருளிச்செய்த. சொல்-பாசுரங்களை. நம்புவார்-தஞ்சமாகநினைத்திருக்குமவர்களுக்கு. பதி-வ்யஸ்தவ்ய தேசம். வைகுந்தம்-பரமபதமாக. காண்மின்-காணுங்கள்......*

ல்யாக்யாநம்.

நிகமத்தில், இப்ப்ரபந்தத்தையே தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்காவாசபூமி பரமபதமென்கிறார்.

( அன்பன் ) வாத்ஸல்யத்தையே நிரூபகமாகவுடையவனாயிற்றீஸ்வரன் இன்னானுக்கன்பன் என்று விசேஷியாமையாலே. " ஸிவ-முணாலேவிவக்ஷு " ( శ్రీతాం మధుక్షత్వల ) என்கிறபடியே - சர்வவிஷயமாயிற்று அவனுடைய வாத்ஸல்யமிருப்பது அதுக்குஹேதுவென்னென்னில்; "ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவ: " ( సర్వేషామేవలోకానాంపితామాతాచమాధవః ) என்றும், " தேவாநாம்தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம் " ( దేవానాందానవానాంచసామాన్యమధిదైవతం ( என்றும் - ஜநகத்வப்ரயுக்தமான சம்பந்தம் சர்வசாதாரணமா யிருக்கையாலே வாத்ஸல்யமும் பொதுவாயிருக்கும். ( தன்னையடைந்தவர் கட்கெலாமன்பன்தென்குருகூர்நம்பி)ஆழ்வாருடைய அன்பு அங்ஙன் பொதுவாயன்றேயிருப்பது ; " பரமனைப்பயிலும் திருவுடையார் யவரேலும் - அவரெம்மையாளும்பரமர் " என்கிறபடியே - பகவத்ஸம்பந்த நிபந்தநமாயிறேயிருப்பது. தம்மைப்போலே " அடிக்கீழமர்ந்துபுகுந்தேன் " என்பாரெல்லாரையுந்தமக்கு நாதராகவாயிற்று நினைத்திருப்பது. ( தென்குருகூர்நகர்நம்பி ) " அடியாரடியார்தம்மடியார் " என்று - தத்ஸம்பந்திகளளவும் பண்ணினப்ரேமத்தாலே பூர்ணராயிருப்பர். ( நம்பிக்கன்பனாய் ) பகவத்விஷயத்தள

வுமன்றிக்கே ததீயரளவுமன்றிக்கே ஆசார்யவிஷயத்திலே ஸக்தராய், தனக்குபுருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத்விஷயத்தைப் பற்றவமையும்; அங்ஙன்தானுகந்ததன்றிக்கே "ஈஶ்வரனுகப்பே புருஷார்த்தம்" என்றிருக்கில் பாகவதர்களைப்பற்றவமையும்; "ஜ்ஞாநீத்வாத்மைவமே மதம்" (జ్ఞానీత్వాత్మైవ మే మతం) "மமப்ராணாஹிபாண்டவா:" (మమ ప్రాణా హి పాండవాః) என்று - பாண்டவர்களைத்தனக்கு தாரகராகவிறே நினைத்திருப்பது; ஈஶ்வரனோடு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வாசியற எல்லாருடையவுகப்பும் புருஷார்த்தமென்றிருக்கிலாசார்யனைப்பற்றவடுக்கும்; "ஆசார்யவான் என்றாயிற்று ஸ்ரீவைஷ்ணவர்களுகப்பது; ப்ரதமத்திலே ஆசார்யன்தனக்கு அஜ்ஞாதஜ்ஞாபகமுகத்தாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப்பிறப்பித்து பகவத்ஸமாஶ்ரயணவேளையிலே புருஷகாரபூதனாய், தன்னுடைய அநுஷ்டாநத்தாலே இவனைநல்வழியேகொண்டுபோய், ப்ராப்திதசையிலும் சாத்யவிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கக்கடவனாய் இப்படிபஹுமுகத்தாலே உத்தேஶ்யனாயிறே யிருப்பது.

மதுரகவிசொன்னசொல் ) ஆழ்வாரைத்தாம்சொன்ன பாசுரம் தமக்கினிதாயிருக்கையாலேமதுரகவியென்கிறார்.

( சொன்னசொல்நம்புவார்பதிவைகுந்தங்காண்மினே ) இனிதாயிருந்ததில்லையாகிலும், இப்ப்ரபந்தத்தைத்தஞ்சமா [redacted] நினைத்திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேசம் பரமபதம். ஆழ்வாருத்தேஶ்யரானால், திருநகரியன்றோ ப்ராப்யமாவதென்னில்; திருநகரியில் [redacted] பொலிந்துநின்றபிரானையும், ஆழ்வாரானையுமா யிருபுரியாய்ச்செல்லும்; அங்ஙன்றிக்கே ஆழ்வாரானையேயாய்ச்செல்லும் பரமபதம்; "அடியார்நிலாகின்றவைகுந்தமோ" என்றும், "வானவர்

நாடு" என்றுஞ்சொல்லக்கடவதிறே. நம்பிதிருவழுதி [redacted] நாடுதாசர் "'நம்புவார்பதிவைகுந்தம்' என்று-அவர்களிருந்த தேசங்காண்பரமபதம்" என்றுசொல்லுவர்; "உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகுந்தம் மூரெல்லாம்" என்னக்கடவதிறே; "'கூரத்தாழ்வான்மகன் பிறந்தபின்பு சம்சாரமும் பரமபதமு மிடைச்சுவரைத்தள்ளி யொருபோகியாயிற்றுக்காண்' என்றுபெற்றிபணித்தார்" என்றுபிள்ளை யருளிச்செய்வர்................................(கக)

## அரும்பதம்.

நிகமத்தில் 'நம்புவார்பதிவைகுந்தங்காண்மின்' என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (நிகமத்தில் இத்யாதி)

அன்பன் என்றவிடத்தில் ப்ரீதியைவிஷயாநுரூபமாக வாத்ஸல்யபரமாக வருளிச்செய்கிறார் (வாத்ஸல்யத்தைஇத்யாதி) அன்பன்றன்னையடைந்தவர்கள்-ஸ்ரீமஹாபாகவதர்கள். இங்கு 'அன்பன்' என்றதுபக்தன் என்றபடி. 'நம்பி' பததாத்பர்யம் (அடியாரித்யாதி) பகவானையும் பாகவதர்களையும்பற்றாமல் ஆழ்வார்விஷயத்திலன்பராவானென்னென்ன 'அன்பன்' 'தன்னையடைந்தவர்கட்கெலாமன்பன் நம்பிக்கன்பன்' என்கிறபதங்களைக்கடாக்ஷித்த [redacted] வர்களுக்குண்டான பலதாரதம்யங்களை யருளிச்செய்கிறார். (தனக்கு என்றுதொடங்கி அஞ்சுவாக்யத்தாலே)

அவர்களுக்குகப்பாகவன்றிக்கே அவன்பண்ணின வுபகாரத்தாலும் பற்றவேண்டுமென்கிறார். (ப்ரதமத்தில் இத்யாதி) 'சொல்நம்புவார்' என்னாதே 'சொன்ன' என்கையாலே பலிதம் (இனிதாய் இத்யாதி) (இருபுரியாவது) ஒருவன்முறைக்கு எதிர்முறைக்குக்கு விபரீதமாயிருக்கை. இங்கே தானே பரமபதம் என்றதுக்கு ஸம்வாதமாகவருளிச்செய்கிறார் (கூரத்தாழ்வானித்யாதி) (பெற்றிபணித்தார் என்றது) இங்கேயிருக்கச்செய்தேதானே அந்தவிபூதியிலநுபவத்தைப்பெற்றிபணித்தார். அங்குத்தையிலநுபவம் இங்

சேகிட்டுகைகயாலே இங்கேயிருந்தே அந்தவிபூதியை யுண்டாக்கி னார்; ஆசையாலேயொரு போகியாயிற்றென்றபடி............(௧௧)

ஸ்ரீமதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்,

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

# கண்ணிநுண்சிறுத்தாம்பு

ப்ரதிபத-வ்யாக்யாந அரும்பதங்கள்

முற்றிற்று.



மதுரகவியாழ்வார்.



நுசரான ஆழ்வாருக்கு, அன்பனுய் - தாசபூதராய், மதுரகவி- ஸ்ரீமதுரகவிகள், சொன்ன-அருளிச்செய்த, சொல்-பாசுரங்களை, நம்புவார்-தஞ்சமாகநினைத்திருக்குமவர்களுக்கு, பதி-வ்யஸ்தவ்ய தேசம், வைகுந்தம்-பரமபதமாக, காண்மின்-காணுங்கள்.......*

வ்யாக்யாநம்.

நிகமத்தில், இப்ப்ரபந்தத்தையே தஞ்சமாக நினைத் திருக்குமவர்களுக்காவாசபூமி பரமபதமென்கிறார்.

( அன்பன் ) வாத்ஸல்யத்தையே நிரூபகமாகவுடை யவனுயிற்றீஸ்வரன் இன்னானுக்கன்பன் என்று விசேஷியா மையாலே. " ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம் " ( ఽజ్ఞాకమనిక్త్ల ) என்கிறபடியே - சர்வவிஷயமாயிற்று அவனுடைய வாத் ஸல்யமிருப்பது. அதுக்கு ஹேதுவென்னென்னில்; "ஸர்வே ஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ: " ( ಸರ್ವೇಷಾ ಮೇವ ಲೋಕಾನಾಂ ಪಿತಾ ಮಾತಾ ಚ ಮಾಧವಃ ) என்றும், " தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம் " ( దేవానాందానవానాం చ సామాన్యమధిదైవతం ( என்றும் - ஜநகத்வப்ரயுக்தமான ச ம்பந்தம் சர்வசாதாரணமா யிருக்கையாலே வாத்ஸல்யமு ம் பொதுவாயிருக்கும். ( தன்னையடைந்தவர் கட்கெலா மன்பன்தென்குருகூர்நம்பி)ஆழ்வாருடைய அன்பு அங்ஙன் பொதுவாயன்றேயிருப்பது | " பரமனைப்பயிலும் திருவு டையார் யவரேலும் - அவரெம்மையாளும்பரமர் " என் கிறபடியே - பகவத்ஸம்பந்த நிபந்தநமாயிறேயிருப்பது. த ம்மைப்போலே " அடிக்கீழமர்ந்துபுகுந்தேன் " என்பா ரெல்லாரையுந்தமக்கு நாதராகவாயிற்று நினைத்திருப்பது. ( தென்குருகூர்நகர்நம்பி ) " அடியாரடியார்தம்மடியார் " என்று - தத்ஸம்பந்திகளளவும் பண்ணினப்ரேமத்தாலே பூர்ணராயிருப்பர். ( நம்பிக்கன்பனுய் ) பகவத்விஷயத்தள

வுமன்றிக்கே நதியரளவுமன்றிக்கே ஆசார்யவிஷயத்திலே ஸக்தராய், தனக்குபுருஷார்த்தம் வேண்டியிருக்கில் பகவத்விஷயத்தைப் பற்றவமையும்; அங்ஙன்தானுகந்ததன்றிக்கே "ஈஶ்வரனுகப்பே புருஷார்த்தம்" என்றிருக்கில பாகவதர்களைப்பற்ற வமையும்; "ஜ்ஞாநீத்வாத்மைவமே மதம்" (జ్ఞానీత్వాత్మైవమే మతం) "மம ப்ராணா ஹி பாண்டவா:" (మమ ప్రాణా హి పాండవాః) என்று - பாண்டவர்களைத்தனக்கு தாரகராகவிறே நினைத்திருப்பது; ஈஶ்வரனோடு ஸ்ரீவைஷ்ணவர்களோடு வாசியற எல்லாருடையவுகப்பும் புருஷார்த்தமென்றிருக்கிலாசார்யனைப்பற்ற வடுக்கும்; "ஆசார்யவான் என்றுயிற்று ஸ்ரீவைஷ்ணவர்களுகப்பது; ப்ரதமத்திலே ஆசார்யன்தனக்கு அஜ்ஞாதஜ்ஞாபநமுகத்தாலே ஸ்வரூபஜ்ஞாநத்தைப்பிறப்பித்து பகவத்ஸமாஶ்ரயணவேளையிலே புருஷகாரபூதனாய், தன்னுடைய அநுஷ்டாநத்தாலே யிவனைநல்வழியேகொண்டுபோய், ப்ராப்திதசையிலும் சாத்யவிருத்தியைப் பண்ணிக்கொடுக்கக்கடவனாய் இப்படிபஹுமுகத்தாலே உத்தேஶ்யனாயிறே யிருப்பது. மதுரகவிசொன்னசொல் ) ஆழ்வாரைத்தாம்சொன்ன பாசுரம் தமக்கினிதாயிருக்கையாலேமதுரகவியென்கிறார். ( சொன்னசொல்நம்புவார்பதிவைகுந்தங்காண்மினே ) இனிதாயிருந்ததில்லையாகிலும், இப்ப்ரபந்தத்தைத்தஞ்சமாக நினைத்திருக்குமவர்களுக்கு வஸ்தவ்யதேசம் பரமபதம். ஆழ்வாருத்தேஶ்யரானால், திருநகரியன்றோ ப்ராப்யமாவதென்னில்; திருநகரியில் * பொலிந்துநின்ற பிரானையும், ஆழ்வாரானையுமா யிருபுரியாய்ச்செல்லும்; அங்ஙனன்றிக்கே ஆழ்வாரானையேயாய்ச்செல்லும் பரமபதம்; "அடியார்நிலாகின்ற வைகுந்தமோ" என்றும், "வானவர்

நாடு'' என்றுஞ்சொல்லக்கடவதிறே. நம்பிதிருவழுதி வள நாடுதாசர் "'நம்புவார்பதிவைகுந்தம்' என்று-அவர்களிருந்த தேசங்காண்பரமபதம்'' என்றுசொல்லுவர்; "உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகுந்தம் மூரெல்லாம்'' என்னக்கடவதிறே; "'கூரத்தாழ்வான்மகன் பிறந்தபின்பு சம்சாரமும் பரமபதமு மிடைச்சுவரைத்தள்ளி யொருபோகியாயிற்றுக்காண்' என்றுபெற்றிபணித்தார்'' என்றுபிள்ளை யருளிச்செய்வர்...............................(கக)

## அரும்பதம்.

நிகமத்தில் 'நம்புவார்பதிவைகுந்தங்காண்மின்'என்றதைக்கடாக்ஷித்தவதாரிகை (நிகமத்தில் இத்யாதி)

அன்பன் என்றவிடத்தில் ப்ரீதியைவிஷயாநுரூபமாக வாத்ஸல்யபரமாக வருளிச்செய்கிறுர் (வாத்ஸல்யத்தைஇத்யாதி) அன்பன்றன்னையடைந்தவர்கள்-ஸ்ரீமஹாபாகவதர்கள். இங்கு 'அன்பன்' என்றதுபக்தன் என்றபடி. 'நம்பி' பததாத்பர்யம் (அடியாரித்யாதி) பகவானையும் பாகவதர்களையும்பற்றுமல் ஆழ்வார்விஷயத்திலன்பராவனென்னென்ன 'அன்பன்' 'தன்னையுடைந்தவர்கட்கெலாமன்பன் நம்பிக்கன்பன்' என்கிறபதங்களைக்கடாக்ஷித்து இவர்களுக்குண்டான பலதாரதம்யங்களை யருளிச்செய்கிறுர். (தனக்கு என்றுதொடங்கி அஞ்சவாக்யத்தாலே)

அவர்களுக்குகப்பாகவன்றிக்கே அவன்பண்ணின வுபகாரத்தாலும் பற்றவேண்டுமென்கிறுர். (ப்ரதமத்தில் இத்யாதி) 'சொல்நம்புவார்' என்னுதே 'சொன்ன' என்கையாலே பலிதம் (இனிதாய் இத்யாதி) (இருபுரியாவது) ஒருவன்முறைக்கு எதிர்முறைக்குக்கு விபரீதமாயிருக்கை. இங்கே தானே பரமபதம் என்றதுக்கு ஸம்வாதமாகவருளிச்செய்கிறுர் (கூரத்தாழ்வானித்யாதி) (பெற்றிபணித்தார் என்றது) இங்கேயிருக்கச்செய்தேதானே அந்தவிபூதியிலநுபவத்தைப்பெற்றிபணித்தார், அங்குத்தையிலநுபவம் இங்

கேஷிட்டுகையாலே இங்கேயிருந்தே அந்தவிபூதியை யுண்டாக்கி ஞர்; ஆகையாலேயொரு போகியாயிற்றென்றபடி............ (சக

ஸ்ரீமதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

# கண்ணிநுண்சிறுத்தாம்பு

ப்ரதிபத-வ்யாக்யாந அரும்பதங்கள்

முற்றிற்று.



மதுரகவியாழ்வார்.

